

ஸ்வாமி

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன்

அருளிச்செய்த

# அஞ்சலி வைபவம்

ஸ்ரீ உவே.

A. K. ரங்கராமானுஜாச்சாரியார்

ஸ்வாமியின் உபயமாக

ஸ்வாமியின் திருமாளிகையில்

21, துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு,

திருவல்லிக்கேணி

65 - வது நாள் உத்ஸவத்தில்

வெளியிடப்பட்டது.

பிலவங்க - கார்த்திகை 4உ.] [20—11—'67



ஸ்வாமி

ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகன்

அருளிச்செய்த

# அஞ்சலி வைபவம்

ஸ்ரீ உவே.

A. K. ரங்கராமாநுஜாச்சாரியார்

ஸ்வாமியின் உபயமாக

ஸ்வாமியின் திருமாளிகையில்

21, துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு,

திருவல்லிக்கேணி

65 - வது நாள் உத்ஸவத்தில்

வெளியிடப்பட்டது.

பிலவங்க - கார்த்திகை 4உ.] [20—11—'67

# அஞ்சலி வைபவம்

ஸ்வாமி ஸ்ரீமங்கிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் அஞ்சலி வைபவம் மிகுந்த வைபவத்தோடு விளங்குவது.

அஞ்சலியின் பெருமையைப் பலர் பலவகையாகப் பேசினும் ஸ்வாமி இந்தரஹஸ்யத்தில் மிகவும் அழகாக நிர்த்தாரணம் செய்தருளுகிருர்.

ஆளவந்தாரருளிச்செய்த ஒரு ச்லோகத்தின் வ்யாக்யானமாக அமைந்தது இந்த ரஹஸ்யம்.

அஞ்சலிபரத்தின் பெருமையை முதலில் முதலிகளான ஆளவந்தார் பேசினுர், பட்டர் பேசினுர், இதை யடியொத்தி ஸ்வாமியும் பேசுகிருர்.

தமிழும் வடமொழியும் இந்த திருநாமத்தில் இருதசையாக அமைவது உற்று நோக்கத்தக்கது. அஞ்சலி என்பது ஜீவனுடைய தசை. இந்த அஞ்சல் என்பது எம்பெருமானுடைய தசை. இந்த அஞ்சலியை அவன் யாசிக்கவும் முற்பட்டான்.

இவ்வஞ்சலி வைபவத்தின் வைபவத்தை நினைத்தால் அஞ்சலி பண்ணுவதன்றி வேறு என்ன செய்ய இயலும் !

இப்பதிப்பு ஸ்ரீ உவே. பொன்பதர்க் கூட்டம் ஆவலி (A. K. ரங்கராமாநுஜாச்சாரியர் ஸ்வாமியின் உபயமாக ஸ்வாமி திருமாளிகையில் 21, துளசிங்கப் பெருமாள் கோயில் தெரு, திருவல்லிக்கேணி) நடந்த 65வது நாள் உத்ஸவத்தில் தேசிகனடியார் திருக்கரங்களில் ஸமர்ப்பிக்கப்பட்டது.

அஞ்சலியோடு அனந்ததன்யவாதங்கள்

20—11—'67
கார்த்திகை, 4

ஸேவா. ஸ்ரீநிவாஸராகவ தாஸன்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம :



# அஞ்சலி வைபவம்



**ஸ்ரீமான் வேங்கட நாதார்ய:** கவிதார்க்கிக கேஸரீ
வேதாந்தாசார்யவர்யோமே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி

---

ராமாநுஜ தயா பாத்ரம் ஜ்ஞாந வைராக்ய பூஷணம்,
ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்.

சீரொன்று தூப்புல் திருவேங் கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

---

**ஹிதாய ஸர்வ ஜகதாம் வ்யக்தம் யோஞ்ஜலிவைபவம் |
ப்ராசீகசத் தம் வந்தேஹம் வேதாந்தயுகதேசிகம் ||**

---

त्वदंघ्रिमुद्दिश्य कदापि केनचित्
यथा तथा वापि सकृत् कृतोऽञ्जलिः
तदैव मुष्णात्यशुभान्यशेषतः
शुभानि पुष्णाति न जातु हीयते ॥

த்வதங்க்ரி முத்திச்ய கதாபி கேநசித்
யதா ததா வாபி ஸக்ருத் க்ருதோ஽ஞ்ஜலி :
தைதவ முஷ்ணாதி அசுபாந்ய சேஷத :
சுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே ||

பெரிய முதலியார்

தவாம்ருதஸ்யந்தினி பாத பங்கஜே.—என்கிற ச்லோகத்திலே பகவச் சரணாரவிந்தத்தின் போக்யதாதிசயத்தை அத்யவஸித்தவனுக்கு அதினுடைய துஸ்த்யஜதையாலே "கண்டு கேட்டுற்று மோந்துண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்." என்னுமதில் சொல்லுகிற ஐச்வர்ய கைவல்ய ரூபங்களான ப்ராப்யாந்தரங்களிலே இழிப்பாறுகை கூடாது என்று அருளிச்செய்தார். அநந்தரம்

(த்வதங்க்ரிமுத்திச்ய). என்கிற ச்லோகத்தாலே அப்படிப்பட்ட அதிகாரிகளுக்குத் திருவடிகளை உத்தேசித்து உண்டான அல்பாநுகூலங்களான வ்யாபாரத்தாலே ஸர்வாபேக்ஷித ஸித்தி உண்டாம்படியான ஆச்ரயண ஸௌகர்யத்தாலும் திருவடிகளுடைய துஸ்த்யஜதையை அருளிச் செய்கிறார்.

இங்கு 'த்வதங்க்ரி முத்திச்ய' என்(கி)றது ஸர்வலோக சரண்யமாய் ஸர்வ போக்யாதிசாயி களான தேவரீருடைய சரணாரவிந்தங்களை உபாய மாகவும் ப்ராப்யமாகவும் அபிஸந்தி பண்ணி, என் (கி)றபடி. இத்தால்

**ப்ரம்ஹாணம் சிதிகண்டம்ச யாஸ் சாந்யா தேவதா : ஸ்ம்ருதா :**
**ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்.**

**ஏதௌத்வௌ விபுதச்ரேஷ்டௌ**
**ப்ரஸாத க்ரோத ஜௌ ஸ்ம்ருதௌ**
**ததாதர்சித பந்தாநௌ**
**ஸ்ருஷ்டி ஸம்ஹார காரகௌ ||**

இத்யாதிகளில் பரதந்த்ர சேதனராகச் சொல்லு கையாலே ஸாக்ஷான் மோக்ஷப்ரதானத்துக்கு ஸமர்த்தரல்லாத—

**எருத்துக் கொடியுடையானும் பிரமனும் இந்திரனும் முதலான திருவில்லாத் தேவரைக் கைவிட்டபடியும்.** அல்ப அஸ்த்திரத்வாதி தோஷ தூஷிதங்களான ப்ரயோஜநாந்தரங்களில் பற்றற்றபடியும் சொல்லிற் றுயிற்று.

பஹுத்வாரஸ்ய தர்மஸ்ய

என்கிறபடியே நாநாவிதங்களான தர்மங்க ளெல்லாம் கால விசேஷங்களைப் பற்றியிருக்கும். எங்ஙனே என்னில் :

**அங்யே க்ருதயுகே தர்மா :**

இத்யாதிகளிற்படியே யுகபேதம், அயநபேதம், மாஸ பேதம், பக்ஷபேதம், திதிவார நக்ஷத்ர பேதம். ராத்ரி திவஸாதி பேத்ம், யாம பேதம்' ராசிபேதம், முஹூர்த்த பேதம் என்று இப்படிப்பட்ட காலபேதங்களிலே வ்யவஸ்த்திதங்களாயிறே கர்ம விசேஷங்கள் இருப்பது. இவ்வஞ்ஜலி (பந்த) ரூபமான ஸுகர்மத்திற்கு ருசி பிறந்தபோதே காலம், மற்றொரு கால விசேஷம் பார்த்திருக்கவேண்டாம் என்னுமிடத்தை 'கநாபி' என்று அருளிச் செய்கிறார்.

வர்ண தர்மம், ஆச்ரம தர்மம், குண தர்மம் நிமித்த தர்மம் என்றாற்போலே சொல்லும் தர்மங்கள் எல்லாம் சில அதிகாரி விசேஷங்களைப் பற்றியிருக்கும். இவ்வஞ்ஜலிபந்தம் ஸத்யவசநாதிகளைப் போலே ஸாமாந்ய தர்மமாகையாலே ப்ராஹ்மணன் முதலாக ச்வபாகனளவாக ஸர்வருக்கும் சாஸ்த்ரீயமுமாய் ஸுகரமுமாயிருக்கும் என்னுமிடத்தை 'கேநசித் என்று அருளிச் செய்கிறார்.

அல்லாத தர்மங்களுக்கெல்லாம் நாநாவிதங்களான ப்ரகார விசேஷ நியமங்கள் உண்டாயிருக்கும். இவ்வஞ்ஜலிக்குப் பராவர தத்வஹித புருஷார்த்தங்களில் தெளிவு உண்டாகவுமாம், இல்லையாகவுமாம். மஸ்திஷ்க ஸம்புடாதிகளில் வேண்டினபடியாகவுமாம் ; வசம் செய்யும் கை இல்லாதபோது வாக்காலும் மநஸ்ஸாலுமாகவுமாம். எல்லாப்படிக்கும்

இது ஸபலமாம் என்னுமிடத்தை ' யதா ததா வாபி என்று அருளிச் செய்கிருர்.

**ஸக்ருத் க்ருத : சாஸ்த்ரார்த்த :**

என்கிற ஸாமாந்யத்திற்கு அபவாதமில்லாமை யாலே ஆவ்ருத்யபேக்ஷை இல்லை என்னும் இடத்தை 'ஸக்ருத் க்ருத:' என்று அருளிச் செய்கிருர்.

**ஸர்வேஷாமேவதர்மாணும் உத்தமோவைஷ்ணவோ விதி:**
**ரக்ஷதே பகவாந் விஷ்ணு : பக்தாந் ஆத்ம சரீரவத்**

இத்யா திகளாலே தர்மாந்தரங்களிற் காட்டில் அதிக ப்ரபாவங்களாகப்ரஸித்தங்களான ஸம்மார்ஜந உபலேபந, மாலாகரண, தீபாரோபண, ப்ரதக்ஷிண, ப்ரணம, ஸ்துதி, ஸங்கீர்த்தந, ஜபாதிகளிற்காட்டிலும் அதிகதமமாக " அஞ்சலி: பரமாமுத்ரா " என்று சொல்லப்பட்ட இதின் ஸ்வரூபம் கை கூப்புமளவே என்று தோற்றுகைக்காக **அஞ்சலி :'** என்கிருர்.

காலாந்தரத்திலே பலிக்கும் கர்மங்களைப் போலன்றிக்கே இங்கு க்ஷிப்ரம் தேவ ப்ரஸாதிநீ என்ற ப்ரபாவத்தை ' **ததைவ**' என்று அருளிச் செய்கிருர்.

'அசுபங்களை நசிப்பிக்கும்' என்கிற அர்த்தத்தை 'முஷ்ணுதி அசுபாநி' என்று அருளிச் செய்ய வேண்டிற்று ஏன் என்னில்? ஆச்ரிதனை வன் அநாதி வாஸனைகள் மேலிட்டு ஸாம்ஸாரிக புண்ய பாப ரூபங்களான விலங்குகளை விடுவிக்க இசையாதொழியிலும்,

'தமர்கள் கூட்டவல் வினையை நாசம் செய்யும்
சதிர் மூர்த்தி'

என்கிறபடியே பாலனை உபச்சந்தநம்பண்ணி அபத்யத்தைப் பரி ஹரிக்குமா போலே ஒரு விரகாலே இவனுக்கு அநுகூலங்களாய்த்தோற்றும் பந்தகங்களைக் கழிக்கும் என்றபடி. இங்கு சொல்லுகிற அசுபங்களாவன :—ப்ராப்தி விரோதிகளான கர்மங்களாதல் உபாயாதிகளை விரோதிக்கும் கர்மங்களாதல் என்று யதாதிகாரம் கண்டுகொள்ளுவது.

க்ருச்ச்ரசாந்த்ராயணாதி கர்மங்கள் சில அசுபங்களைக்கழிக் கவற்றாயிருக்கும். இது அப்படியன்று. ஸர்வாநிஷ்டங்களைக் கழிக்கவற்று என்னும் இடத்தை அசேஷத : என்று அருளிச்செய்கிறார், அநிஷ்டங்களை கழிக்குமளவே நின்று, அது முதலாகத் தோன்றி

தொன்மா வல்வினைத்தொடர்களை முதலரிந்து
நின்மா தாள் சேர்ந்து.

இத்யாதிகளிற்படியே இஷ்ட ப்ராப்தி பர்யந்தமாகும் என்னும் இடத்தை 'சுபாநி புஷ்ணாதி' என்று அருளிச்செய்கிறார். இங்கு சுபங்களாவன—பரிபூர்ண பகவதநுபவமும், அதின் உபாயமும், அதன் பரிகரமும், அதின் ப்ரகாரமும், அதின் அதிகாரமும். க்ருதோபாயனுடைய ஸ்வயம் ப்ரயோஜந கைங்கர்யமும். இவற்றை 'புஷ்ட' மாக்குகையாவது விலக் கறுத்துத் தலைக்கட்டுகை.

இவ்வஞ்ஜலி தான் தன்னுடைய கர்த்தா ஒரு வனுக்குமே பலம் கொடுத்து அவ்வளவிலே பர்ய வஸிக்கிறதன்று. ‘ தொழுது எழு என் மனனே ’ என்று தொடங்கி நம்மாழ்வார்—

எமரேழ் எழு பிறப்பும் மா சதிர் இது பெற்று
நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா

என்று அருளிச்செய்தபடியே அஞ்ஜலி பண்ணின வனுடைய அநுபந்திகளுக்கும் அப்படியே உபகா ரகமாம் என்னுமிடத்தை ‘ ந ஜாது ஹீயதே ’ என்று அருளிச் செய்தார். ஸ்வர்க்காதி பலங்களைப் போலே இதின் பலமான மீளா அடிமைப்பணி ஒரு காலும் அழியாது என்று கருத்தாகவுமாம். அங்ஙனன்றிக்கே ஒரு கால் தொடங்கின அஞ்ஜலி, பத்தாஞ்ஜலி புடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந : என்கிறபடியே பரம பதத்திலும் பல ரூபமான அஞ்ஜலியாய்ப் பரிணமித்து ஒருக் காலும் அழியாதென்னவுமாம்.

**அஞ்சலி : பரமா முத்ரா**

இவ்வஞ்ஜலி

நோற்றநோன்பிலேன் ‘ புகலொன்றில்லா அடியேன் ’ இத்யாதிகளிற்படியே ஆகிஞ்சந்ய அநந்யகதிகத் வாதி யோகத்தாலே ப்ரபத்யதிகாரியாய், பரந்யா ஸம் பண்ணுகிறவனுடைய ஸ்வரக்ஷணார்த்த ஸ்வவ்யாபாரத்தில் கை முடங்குகிறபடியைக் காட்டு கிற முத்ரையாய் நின்றபோது

**தாவதார்த்திஸ் ததா வாஞ்ச்சா தாவந்மோஹஸ் ததா ஸுகம்**

**யாவந்நயாதி சரணம் த்வாமசேஷாக நாசநம் :**

இத்யாதிகளிற்படியே இவ்வஞ்ஜலிக்கு உள்ளீடாய்க் கொண்டு ஸகல பல ஸாதநமாய் நிற்கிற ப்ரபத்தியின் ப்ரபாவத்தைச் சொல்லுகையிலே தாத்பர்யமாகையாலே இங்கு ஒரு ப்ரமாண விரோதமும் வாராது.

இப்படி ப்ரபந்நன் வாங்கின கைக்குப் பெருமாள் வைத்தகை உத்தரம். எங்ஙனே என்னில் :— ப்ரார்த்தநாபூர்வக பரந்யாஸம் பண்ணின அகிஞ்சநனுடைய ஸ்வ ரக்ஷணார்த்த ஸ்வ வ்யாபார ப்ரவ்ருத்தி ரூப பல விசேஷவ்யஞ்ஜக முத்ரை **அஞ்ஜலி.** பர ஸ்வீகாரம் பண்ணின ஸ்வதந்த்ர காருணிகனுடைய நிரபேக்ஷ ரக்ஷணாபிப்ராய வ்யஞ்ஜகமுத்ரை அபய ஹஸ்தம். இவ்விடத்தில்

அஞ்சலி : பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவ ப்ரஸாதிநீ

என்றும்

**அந்தரேண அஞ்ஜலிம் பத்த்வா லக்ஷ்மணஸ்ய ப்ரஸாதநாத்**

என்றும் சொல்லுகிறபடி தேவ ப்ரஸாதநமான அஞ்ஜலிக்கு ப்ரபத்திகர்ப்பத்வம் சொன்னால்,

**ப்ரஸாதயஸ்வ த்வம் சைநம் சரணாகதவத்ஸலம்**
**ப்ரஸாதயே த்வாம் அஹமீசமீட்யம்**

சரணமுபகம்ய தத் ப்ரஸாதோபப்ரும்ஹித மனோவ்ருத்தி: இத்யாதிகளிற்படியே ப்ரபத்திக்கும் ப்ரஸாதநத்வமுண்டாகையாலும், ப்ரபத்தியால் நிக்ரஹநிவ்ருத்தி ரூபமான ப்ரஸாதம் பிறவாதாகில் இது நிஷ்ப்பலமாக ப்ரஸங்கிக்கையாலும், ப்ரஸாதநமாகச் சொன்ன அஞ்ஜலிக்கு பரந்யாஸ வ்யஞ்ஜக முத்ரா ரூபத்வம் சொன்னது விருத்தமன்று. ஸஹஜ க்ருபா விசிஷ்டனை பகவான் யதாதிகாரம் பக்தியாலேயாதல் ப்ரபத்தியாலேயாதல் ப்ரஸாதநீயனாய். அவற்றாலே ப்ரஸந்நனை பகவான் நிக்ரஹபலபூத ப்ரக்ருதி ஸம்பந்தாதி விரோதிநிவர்த்தந ஸங்கல்பவிசிஷ்டனாய்க் கொண்டு பக்தி நிஷ்ட்டனுக்கும் ப்ரபத்தி நிஷ்ட்டனுக்கும் மோக்ஷப்ரதனாம். இப்ப்ரபத்தியால் ப்ரஸந்நனுமளவில் அல்ப வ்யாபாரத்தாலே அவிளம்பிதமாக ஆரப்தகார்யங்களும் அநாரப்த கார்யங்களுமான ஸாம்ஸாரிக புண்ய பாபங்கள் இரண்டும் கழியும்படி இதில் உசிதாதிசயித ப்ரஸாதம் பிறக்கும். இதற்கு மூல காரணம் ஸ்வார்த்த நிரபேக்ஷ பரதுக்க நிராகரணேச்சாருபையான ஸஹஜ க்ருபையாகையாலே—

'நின்னருளே புரிந்திருந்தேன்'

இத்யாதிகளிற்படியே இக் க்ருபையிலே ஊன்றினது தோன்றியிருக்கைக்காக ப்ரபந்நனுக்கு க்ருபா விசிஷ்டன் மோக்ஷப்ரதன் என்றும், பக்திநிஷ்டனுக்கு ப்ரஸாத விசிஷ்டன் மோக்ஷப்ரதன் என்றும் இது ஒரு பிரிவு போலே பேசுகிறார்களத்தனை, அல்லது இவர் பக்கல் க்ருபா ப்ரஸாதங்கள் ப்ரதிநியதங்களன்று.

ப்ரபந்நனளவில் ப்ரஸாதாதிசயமே உள்ளது. அங்ஙனன்றிக்கே மாலாகரஞாதிகளான அல்லாத பகவத் கர்மங்கள் போலே இவ்வஞ்ஜலியும் ஒரு ஸத்கர்ம விசேஷமாய் நின்றால்

நேஹாபிக்ரம நாசோஸ்தி

ஸக்ருதுச்சரிதம் யேந ஹரிரித்யக்ஷர த்வயம்

பத்த : பரிகரஸ்தேந மோக்ஷாய கமநம் ப்ரதி

இத்யாதிகளிற்படியே இட்டபடை கற்படையாய் பாபக்ஷயம், ஸத்வோந்மேஷம், ஸம்யக்ஜ்ஞானம், பக்தி ப்ரபத்திகள் என்று இப்பரம்பரையாலே மோக்ஷ ஸாதநத்வம் உண்டாகையாலே கீழ்ச்சொன்ன ஸர்வாநிஷ்ட நிவ்ருத்திக்கும் ஸர்வாபீஷ்ட ஸித்திக்கும் விரோதமில்லை. இப்படி வழியுண்டாயிருக்க, இது அதிவாதமென்கை உசிதமன்று. ஓர் அதிகாரி விசேஷத்திலே இவ்வஞ்ஜலி ரூபக்ரியா மாத்ரந் தானே ஸாக்ஷாந் மோக்ஷஸாதநம் என்றால் ப்ரதக்ஷிண ப்ரணமாதி க்ரியாமாத்ரங்களும் இப்படியே அவ்யவஹித மோக்ஷஸாதனங்களாக ப்ரஸங்கிக்கும். அப்போது

பக்த்யா பரமயா வாபி

இத்யாதி ப்ரமாணங்களோடு விரோதமுண்டாம். ப்ரயோஜநாந்தரபரனுக்கு இவ்வஞ்சலி அவ்வோ ப்ரயோஜநாந்தரங்களைக் கொடுக்கும். அநந்ய ப்ரயோஜநனை மற்றொரு தெய்வம் தொழாதவனுக்கு உக்த ப்ரகாரத்தாலே அவாவற்று வீடு பெறும்

அவஸ்த்தை யோடே தலைக்கட்டும். இப்படி இவ் வஞ்ஜலியின் ப்ரபாவத்தை நினைத்து

**ஹஸ்தீச துக்க விஷதிக்த பலாநுபந்திந்**
**யாப்ரம்ஹ கீடம பராஹதஸம்ப்ரயோகே**
**துஷ்கர்ம ஸஞ்சய வசாத் துரதிக்ரமே ந:**
**ப்ரதய ஸ்த்ரமஞ்சலி ரஸௌ தவநிக்ரஹாஸ்த்ரே.**

என்றும் சொன்னோம்.

இப்படி 'த்வதங்க்ரிமுத்திச்ய' என்கிற ச்லோகத்திலே முமுக்ஷுவான அதிகாரியினுடைய அநந்ய தேவதாகத்வமும், அநந்ய ப்ரயோஜநத்வமும் இவன் ஸர்வஸ்வாமி திருவடிகளை உத்தேசித்துப் பண்ணுகிற அஞ்ஜலிக்குக் கால நியமமும், இத்தால் உபலக்ஷிதமான தேஹநியமமும், வர்ணாச்ரமாத் யதிகார நியமமும், ப்ரகார நியமமும், ஆவ்ருத்தி நியமமும் என்றிவை இல்லாதபடியையும், இதினுடைய ஆசுகாரித்வமும், அசேஷ தோஷ நிவர்த்தகத்வமும் : அசேஷ கல்யாணகரணத்வமும் அநுபந்தி ரக்ஷகத்வமும், அக்ஷயபல ப்ரதானத்வமும் பலரூப ஸஜாதீயபரிணதிமத்வமும் என்கிற ப்ரபாவங்களையும், இது அநந்ய ப்ரயோஜநனை ப்ரபத்தி நிஷ்டனுக்கும் ப்ரயோஜநாந்தரபரனுக்கும் நிற்கிற நிலைகளையும் அநுஸந்தித்தால் கைகளைக் கூட்டின அஞ்சலி ஒருவருக்கும் கைவிடவொண்ணாதபடி நிற்கும்.

இங்குச் சொன்ன அதிகாரியினுடைய பகவதநந்யார்ஹ சேஷத்வாத்யவஸாயம், பாகவதரல்லாத மாதா பித்ரு ப்ரப்ருதிகளையிட்டுத் தன்னை ஒருத்தன் வ்யபதேசிக்கு மளவில்

**ஏகாந்தீ வ்யபதேஷ்டவ்யோ நைவ க்ராம குலாதிபி:**
**விஷ்ணுநா வ்யபதேஷ்டவ்ய: தஸ்யஸர்வம்ஸஏவஹி**

என்று தெளிந்து,

'கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு அடியேன் ஒருவற் குரியனே' என்று சொல்லும் மறுமாற்றத் தாலே அறியலாம்.

பகவதேகாந்தியான இவனுடைய அநந்ய தேவதாகத்வம் அருகு இருந்தார் அபிப்ராயம் சொல்ல வேண்டும்படி தான் அத்யந்தாவஸந்நனை தசையிலும் தனக்காகத் தன் உற்றுரும் மற்றொரு தெய்வம்தொழ இசையாத ப்ரகாரத்தாலே காணலாம்.

அநந்ய ப்ரயோஜநனை இவன் அளவாகும், சிற்றின்பம் ஒழித்தமை வைஷயிக ஸுகார்த்த வ்யாபார அத்யந்த நிவ்ருத்தியாலே அறியலாம்.

சாரீரம் கேவலம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் என்கிறபடி துக்கநிவ்ருத்திமாத்ரார்த்தமாய் சாஸ்த்ராநுமதமான அசநாதி த்ருஷ்ட வ்யாபாரம் இவனுக்கு தோஷமாகாது.

அநந்யோபாயத்வ இவனுடைய நிர்ப்பரத்வ அத்யவஸாயம் பரந்யாஸம் பண்ணின விஷயத்தில் ஸ்வவ்யாபார ஆத்யந்திக நிவ்ருத்தியாலே அறியலாம்.

இந்நாலு ஆகாரம் உடையவர்க்கு நிதர்சநம் நாதமுனிகள் முதலான ஆசார்யர்கள்.

---

கண்ணன்கழல் தொழக் கூப்பிய
கையின் பெருமை தன்னை
எண்ணம் கடக்க யமுனைத்
துறைவர் இயம்புதலால்
திண்ணம் இதுவென்று தேறித்
தெளிந்தபின் சின்மதியோர்
பண்ணும் பணிதிகள் மாற்றிப்
பழந்தொழில் பற்றினமே. "

அஞ்சலி வைபவம் முற்றிற்று.



நானிலமும் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின்மாறன் மறைவாழ—ஞானியர்கள்
சென்னி யணிசேர் தூப்புல்வேதாந்த தேசிகரே
இன்னுமொரு நூற்றாண் டிரும்.

உத்ஸவ விவரங்களுக்கு ,—

29, லக்ஷ்மீபுரம், வில்லிவாக்கம் என்ற விலாஸத்திற்கு எழுதுக.

Jyothi Printers, Madras-1. Phone: 33636